[25th September 1958

*Poor Harijans and ex-Criminal Tribes*

* 511 *Q.*—SRI T. VELUCHAMI : Will the Hon. the Chief Minister be pleased to state whether there is any proposal to adopt a policy of executing important works under the National Extension Service Scheme entirely at Government cost in the villages either wholly or predominantly inhabited by poor Harijans and ex-criminal tribes without insisting on contribution from them in the form of cash or manual labour?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no such proposal. All works under National Extension Service are undertaken with some public contribution. In the case of works intended for Harijans and other backward classes, the minimum rate of public contribution has been reduced.

SRI T. VELUCHAMI : நமது நாட்டிலே பல அபிவிருத்தித் திட்டப் பகுதிகளில் ஹரிஜன மக்களும், மாஜி குற்றப்பரம்பரை சமூகத்தினர் களும் அதிகமாக வாழ்கின்றார்கள். அந்தக் கிராமங்களிலே அபிவிருத்தித் திட்டங்கள் ஐந்தாறு ஆண்டுகள் நடந்தும், அங்கே அத்தியாவசியமான தேவைகளான ரோடுகள் குடிதண்ணீர் கிணறுகள் கூட நடக்காத நிலை மையில் இருக்கின்றன. அதற்குக் காரணம் . . . .

MR. SPEAKER : அதற்குக் காரணம் சொல்ல வேண்டியதில்லை. கேள்வியை மட்டும் கேளுங்கள்.

SRI T. VELUCHAMI : சர்க்கார் உதவி இல்லாத நிலைமையில் அவர் கள் முன்னேற முடியாத நிலைமையில்தான் அவர்களுக்கு உதவி . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் காரணத்தைச் சொல்ல வேண்டாம். கேள்வியை மட்டும் கேட்கவேண்டும் என்று மிகத் தாழ்மை யுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். கேள்வியாகக் கேட்காவிட்டால் அடுத்த கேள்விக்குப் போய்விடுவேன்.

SRI T. VELUCHAMI : அதே அடிப்படையில், அவர்கள் உடல் உழைப்போ, உதவித் தொகையோ கொடுக்க வேண்டிய அவசியம் இல்லாமல், சர்க்காரே ஒரு டோக்கன் கான்ட்ரிப்யூஷன் மாதிரி உதவித் தொகை வாங் கிக்கொண்டு அங்கே அத்தியாவசியமான வேலைகளை எடுத்துப் பூர்த்தி செய்வதற்கு நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்கள் கொடுக்கவேண்டிய தொகை குறைக்கப்பட்டிருக்கிறது. இதுபோல் டோக்கன் கான்டிரிப்யூஷன் வாங்கிக்கொண்டு ஹரிஜனங்களுக்கும் பிற்பட்ட சமூகத்தினருக்கும் இந்த வேலைகள் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

SRI G. G. GURUMURTHI : தாளவாடி, பரகூர் போன்ற மலைப் பிரதே சங்களுக்கு தேசீய அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் எடுத்துக்கொள்ளப்படும் முக்கியமான வேலைகளுக்காவது, மக்கள் இந்த உதவித் தொகையோ அல்லது உடலுழைப்போ கொடுக்க வேண்டிய அவசியம் இல்லாமல், தங்கள் செலவிலே செய்துகொடுக்க அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே முக்கியமாக கவனிக்க வேண்டியது, பிற்போக்குப் பகுதி என்று சொல்லக்கூடிய இடங்களில் செய்வ தற்கு வேலை இல்லாத காரணத்தால்தான் பிற்போக்குப் பகுதிகளாக இருக் கின்றன. அங்கு வேலையில்லாதவர்களுக்கு வேலை கொடுத்து உதவுகின்ற முறையில்தான் பிற்போக்குப் பகுதிகள் முற்போக்கு அடையமுடியும். வேலை யில்லாத பிற்போக்குப் பகுதிகளில் உள்ளவர்கள் உடலுழைப்பைக் கொடுப் பதற்காவது தயாராக இருக்கவேண்டும். அதற்குக்கூட அவர்கள் தயாராக

25th September 1958]

இல்லை யென்றால், அங்கே ஒரு சௌகரியமும் செய்துகொள்வதற்கு அவர்களுக்கே அக்கறை இல்லை என்பதைத்தான் அது எடுத்துக்காட்டுகிறது. ஆகவே, பிற்பட்ட பகுதிகளில் மக்கள் உடலுழைப்பு கொடுப்பது மிகவும் சுலபமாக இருக்கவேண்டும். அதற்குப் பதிலாக ஒன்றுமே இல்லாமல் சர்க்காரே செய்துகொடுக்க வேண்டுமென்ற அடிப்படையிலே போனால், மக்கள் முன்னேற்றம் அடைவதற்கு இது சாதகமாக இருக்காது என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

SRI V. SUBBIAH : பொருளாதாரத்தில் பின்தங்கிய கிராமங்களுக்கு அந்த டோக்கன் காண்ட்ரிப்யூஷன் என்று சொல்லக்கூடிய சதவிகிதம் என்ன? உடலுழைப்பு இல்லாவிட்டாலும் அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய சதவிகிதம் எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நூற்றுக்கு 50 பங்கு மக்களால் உடலுழைப்பாகவோ பொருளாகவோ கொடுக்கவேண்டும் என்பது சாதாரணமாக அனுசரிக்கக்கூடிய விதி. ஆனால், பிற்போக்குப் பகுதிகளில் மக்கள் நூற்றுக்கு 25 பங்கு கொடுத்தால் போதும் என்று இருக்கிறது. அதைவிடப் பிற்போக்கான மக்கள் இருக்கும், ஹரிஜன அல்லது வேறு பிற்போக்கான வகுப்பினர் இருக்கின்ற இடங்களிலே சில வேலைகளுக்காக அவர்கள் நூற்றுக்குப் பத்து பங்கு கொடுத்தால் போதுமானது என்று இருக்கிறது. இதுமாதிரி, வேலைகளுக்குத் தகுந்த பிரகாரம் விதி மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது.

SRI C. MUTHIAH PILLAI : சமுதாய அபிவிருத்தித் திட்டப் பகுதிகளிலே ஹரிஜன இலாகாவிலிருந்து பங்குத் தொகை கொடுப்பது அரசாங்கத்திற்கு தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரி பத்து சதவிகிதம் என்று குறைக்கப்பட்டிருக்கக்கூடிய பகுதிகளிலே பாக்கி இருக்கும் தொகை சர்க்காரிலிருந்து—ஹரிஜன முன்னேற்றத் தொகையிலிருந்தோ அல்லது வேறு தொகையிலிருந்தோ—கொடுக்கப்படுகிறது.

SRI T. L. SASIVARNA THEVAR : முதுகுளத்தூர் தொகுதியிலே காண்ட்ரிப்யூஷன் இல்லாமல் சர்க்காரே வேலைகளைச் செய்து கொடுக்கவேண்டும் என்ற அபிப்பிராயத்தை கலெக்டர் சிபார்சு செய்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அதுபற்றி அரசாங்கம் என்ன முடிவு செய்திருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுவும் நாம் ஏற்றுக்கொண்டிருக்கும் அபிவிருத்தித் திட்டத்திற்கு மிகவும் முரணானது என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகையால், கொஞ்சமாவது மக்களுடைய காண்ட்ரிப்யூஷனும் திட்டத்தில் இருந்தால்தான், அவர்கள் இன்னும் தொடர்ந்து வேலைகளை எடுத்துக்கொள்வதற்கும், தங்களுடைய வேலையாகவே கருதிச் செய்வதற்கும் உதவியாக இருக்கும்.

### *Supply of midday meals in Elementary Schools*

* 512 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ல் தஞ்சை ஜில்லாவில் எத்தனை ஆரம்பப் பள்ளிகளில் பகல் உணவு அளிக்கப்பட்டது—

(ஆ) அதற்காக அரசாங்கம் செலவிட்ட தொகை எவ்வளவு ?

(இ) இதுவரை பகல் உணவு ஆரம்பிக்கப்பட்டு நிறுத்தியுள்ள பாடசாலைகள் எத்தனை?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) 359.

(*b*) Rs. 24,711·81.

(*c*) Nil.